உ

சிவமயம்.

தேவிகோட்டைத்

திண்ணப்ப செட்டியாருருணிக்கரை

ஸ்ரீ கைலாயவிநாயகர்

# திருவிரட்டைமணிமாலை.

காரைக்குடி

ராஜப்பிள்ளை பிரிண்டிங் வொர்க்ஸ்.

1918

உ

சிவமயம்.

ஸ்ரீகைலாயவிநாயகர் துணை.

தேவிகோட்டைத்

திண்ணப்ப செட்டியாருருண் [illegible]

ஸ்ரீ கைலாயவிநாயகர்

# திருவிரட்டை மணிமாலை.

---

ஸ்ரீ வீரஞான புரஸ்த நல்லூராக்கிய நகராதிப

ஸ்ரீம தாறுமுகநாவல சரண சரண கமலைக

சரண்ணிய

ஸ்ரீம தம்பலவாண நாவலசுவாமிகள்

இயற்றியது

---

இஃது

ஷை திண்ணப்பசெட்டியார் வகையாரால்

காரைக்குடி ஞானம்பிகா அச்சியந்திரசாலையில்

பதிப்பிக்கப்பெற்றது.

---

காலயுக்தி௵ துலாரவி

1918

கலியப்தம் ௫௲௰௯.

சிவமயம்.

திருச்சிற்றம்பலம்.

# சிறப்புப் பாயிரம்.

---

தேவிகோட்டை வே. ஆ. தி. மா.
வித்துவசிகாமணி
ஸ்ரீமான் சிதம்பரச் செட்டியாரவர்கள்
இயற்றியது.

நிலைமண்டில ஆசிரியப்பா.

---

உலகெலாம் பரவ விலகொளி பரப்பிக்
காரிரு ளறக்கடிந் தோருருட் டேர்மேற்
பரிதி வருங்காற் சுருதிவண் டொலிப்ப
மதுவார்ந் தெழுகப் புதுமண முலாவத்
தானே மலர்ந்துமை கோனும் பரசிவ
* சந்நிதி முனர்த்தா டன்னமு மிலாம
லண்ட கோடிக ளுண்டாந் தன்மையை
மாட்சிமைத் தாய காட்சியி னுணர்த்திக்
கண்டார் மனங்கவர் வெண்டா மரையுறை
கலைமகட்குரிய தலைமக னிகர்க்கு
மந்தண ரோம்பிய செந்தழன் மீதெழும்
யாக தூமமே மாகமீ மேகமாய்க்
குழுமி யார்த்து மழை மிகப் பொழிதலி
னெவ்வகை வளனுஞ் செவ்விதி னேங்கப்
பொன்னுட் டினுமுயர் தென்னுட் டினுக்கு

---

* தாள்-முயற்சி, தன்னம்-அற்பம்

றேந்திர மெனப்பலர் தோத்திரம் புரியும்
பூலிகளகலாத் தேவி கோட்டை
நகரத் தின்பா லகர முதல
வெழுத்தெலா மென்ன வழுத்து முதற்குறட்
போலவே பற்பல வாலயங் கட்கு
ளக்கிர கண்ணிய முக்கிய முடைத்தாய்த்
தராதல மெச்சப் புராதன மாம்படி
திண்ணிய தன்மை நண்ணிய திறத்தாற்
றிண்ணானு றென்னக் கண்ணகன் ஞால
மெங்கும் வழங்கு மெங்குல முதல்வர்செய்
யாலய மதனுண் மாலய னறியாச்
சச்சிதா நந்த விச்சுவ நாதனெ
டாட்சி சால்விசா லாட்சி யம்மையே
சான்றோ னெனக்கேட் டென்ற பொழுதினும்
பெரிதுவந் திடவவ ரருகிருந் தாங்கு
மேயவர்க் கருள்கை லாயவி நாயகர்க்
கணிமே விரட்டை மணிமா லைப்பிர
பந்தம் பதார விந்தத் தணிந்தனன்
பார்ப்பா வியசீர் யாழ்ப்பா ணத்து
வட்டுக் கோட்டையாம் பட்டினத் தாறு
முகத்தோன் றற்கு மகப்பேற் றுலாம்
பேறுகற் றோர் சபை யேறுபு கொடுத்தோ
னெத்தலங் களினு முத்தமோத் தமமெனச்
சுருதி யாகமம் பிர திவா திக்கு
மெல்லையின் மகத்துவத் தில்லைமா நகரில்
வித்தியா சாலை வைத்தியா வருமெளி
திலக்கண விலக்கிய வலைக்கடற் குளிப்ப
முட்டறுத் தச்சி விட்டுநா னுதவுங்

தகவுறு மாறு முகநா வலர்பாற்
கற்றுத் தெளிந்தோன் முற்றத் துறந்தோர்
தலைப்பட் டனரெனச் சொலப்பட் டுள்ள
மறையா ராய்ந்தே துறவுபூண் டுள்ளோ
னுற்பவ நகரில் விற்பந சாலையு
நெல்லையிற் பரமத வல்ல லகற்றி
யுய்வைத் தருவது சைவப் பயிரென
தேவா ரத்தா னுவா ரச்சொனு
நந்திரு ஞாநசம் பந்தமூர்த் திக்கு
மடாலய மும்பேர் கெடாதுதா பித்தோன்
சுரசங் கமுமவாம் பிரசங்கவல்லபம்
பூணுசி ரம்பல வாணநா வலனே.

ஸ்ரீமான் பள. அ. ராம. சு. வேங்கிடாசலச் செட்டியாரவர்கள்
இயற்றியது.

---

தேவை நகர்மேவுந் திண்ணனு ரருணிப்பான்
மேவுங் கயிலாய வேழமுகக்—கோவுக்
கிரட்டைமணி மாலை இயம்பினனு வல்லோன்
றெருட்டம் பலவாணன் றேர்ந்து.

ஸ்ரீமான் வீர. ராம. அரு. ராம. அருணசலச்செட்டியாரவர்கள்
இயற்றியது.

---

சீர் மருவுமளகைபெனச் செல்வநிறை தேவையினிற் றிண்ண
[னூர்த
மேர்மிகுமன் புருவெனக்கொள் கயிலைவிநாயகன் பாதத் திரட்
[டையான

வேர்மணிமாலிகை கோத்தான் கவிக்கிறையம் பலவாணனெ
[னு நாவல் லோன்
பேர்பலியுந் திருஞான சம்பந்த மடாதிபனும் பெரியோன்
[ருனே.

தேவிகோட்டை
வித்துவான் ஸ்ரீமத் சொ. வேலுச்சாமிக் கவிராய
ரவர்கள் மாணுக்கர்
ஸ்ரீயான் தி. அ. சு. அ. ராமநாதச் செட்டியாரவர்கள்
இயற்றியது.

---

செகதல மெலாம்புகழ் செந்தமிழ் நாட்டிற்
றிகழ்பல வளநிறை தேவைமாநகர் வாழ்
வைசியர் குலத்தினில் வந்தவ தரித்தோன்
ஈகையும் புகழு மியன்மதி நுட்பமு
மேதகு செல்வமும் விளங்குறப் பெற்றோன்
றன்னு தரத்தினிற் றங்குலத் தார்தமை
முன்னு ளிந்நகர் முயற்சிசெய் தமைத்தோன்
சம்புவி னடித்தலந் தான்பணி சில
னெம்பரம் பரை முன் னேழாம் போன்*
நன் னு மிவ்வுலகி னரேந்திர னெனவளர்
தின்னப்ப னெனும்பெயர் திகழ்தரு பெரியோன்
ஊ நணி நீர்நிறைந் தற்றே யுலகவாம்
பேரறி வாளன் றிருவெனப் பேசலின்
அறிவுந் திருவு மமைபவ னுலகி
னிறை யுபகாரியா நிற்ப வுன்னுவனேல்

---

* போன்-பாட்டன்.

312

V

ஊருணியிற் பிறிதில்லை யென் றோர்ந்தும்
தேவரு முனிவரும் யாவரும் புரிதரும்
மெவ்வகைச் செயற்கும் இன் றி யமையா து
முன்னின் றருள்வோன் முதற் கணபதியே
யாதலி னீண்டுறை வாரெலா மென்றும்
வந்தனை செய்து மனநினை காரியம்
செவ்விதி னுற்றித் திகழ்தர வெண்ணியும்
தன்பெய ரதனுற் றடமமைத் ததன்பால
உயர் பிரதிட்டை யுஞற்ற வீற்றிரு ்கு
மயலெலாம் தவிர்த்தருள் கயிலாய பாமுகற்
கிணை மணிமாலை சாத்தியின் புற்றுன்
ஒரு மேதகையோ னுவன்யா ரென்னில்
யாழ்ப்பாணத்தின வில்பல வமைமை
வட்டுக் கோட்டை மாநகரு தித்தோன்
வடமொழி தென்மொழி மன்மொழி வல்லுநன்
திடவுபங் கியாசகர் சிங்கமாய்த் திகழ்வோன்
பதிபசு பாசப் பண்பு நன்குணர்ந்து
சிவார்ச்சனை புரியுஞ் சிறந்த பேரன்பன்
எல்லையின் மாண்பமை நெல்லையம் பதியில்
ஈனசம்பந்த மிறைஞ்சி னோர்க் ககற்றும்
ஞானசம்பந்த மடால யாதி பதி
துறவு பூண்டுயர் தூய குணத்தினன்
மன்.புகழ ம்பலவாண
நாவலசுவாமி நற்றவன் மாதோ



இந்நூலாசிரியரவர்கள் மாணாக்கர்
ஸ்ரீமத் பா. சிதம்பரம்பிள்ளையவர்கள் இயற்றியது.

---

துவிரத்நமாலாம் ஸ்வபமேதேவ ஸாலா
நிவாஸ கைலாஸ கணேஸகண்டே
கரோதிமேலாமிக கருணாத்ர சித்த:
வித்வான் மஹாநம்பலவாண வாக்மீ.

கற்பகத்தின் கொம்பனையார் காமனனையார்வாழுங்காட்சித்தாய
பொற்பமர் தேவைப்பதியே புண்ணியத்தின் விளைநிலமாய்ப்
[பொலிந்துவைகு
மப்பதி யிலன்றலர் பூமாலையினும் பாமாலை யதிகமென்றே
கற்பமெலாங் கடந்த கயிலாய விநாயகற்கங்கி காரமாக.

நற்குலத்தின் றவப்பயனு நல்லருளம்ப லவாண நாவலோனென்
சற்குரு நல்லருளாளன் சாற்றிரட்டைமணி மாலைதரணி யெங்
[கும்
பொற்புறு பாற்கரனனைய பொலிவெய்தி நறுமணமும் பொ
[லிந்துமல்கச்
சிற்பர நங்கயிலை விநாயகனார் தந்திருவருளே செய்ததன்றே.

காரைக்குடி மனோரஞ்சனி பத்திராதிபர்
திரு. ஸி. எஸ். சோமசுந்தர தேசிகர் இயற்றியது.

---

விண்ணனு யெனுமிமயப் பிடியீன்ற வொருகளிற்றை வியன்சேர்த்தே
[வைத்
திண்ணனு ருருணிவாழ் கயிலாய கணபதியைச் சிந்தித்தேத்திப்
பண்ணனு ரொடுமிரட்டை மணிமாலை புனைந் தணிந்தான்பாரிற்சைவக்
கண்ணனு னம்பலவாணத் துறவர்க் கண்ணனாற் கவிச்சிங்கமே.



உ

சிவமயம்

கணபதி துணை.

திருச்சிற்றம்பலம்.

ஸ்ரீ ஞானசம்பந்தராவே நம:

# தேவிகோட்டைத்
# திண்ணப்பசெட்டியா ரூருணிக்கரை
# ஸ்ரீ கைலாய விநாயகர்

# திருவிரட்டை மணிமாலை.

---

வெண்பா.

தேவைத் திருநகரிற் றிண்ணனூ ரூருணிப்பால்
யாவர்க்கு முன்வந்த வெம்பெருமான்—கோவைக்
கைலை விநாயகனார் காத்தருள்வா ரெம்மைப்
பயில வெலாநலமும் பாங்கு.

கலித்துறை.

பாங்காக வன்னை யகிலேசை மாதவம் பண்டுபண்ணு
ணீங்காது பேண வருசெல்வ மேதிண்ண னீர்நிலைப்பா
லோங்கார நாயக வுன்பத மேசர ணுன்னையன்றி
யிங்கா ரெனக்குத் துணையார் நிகரிவ் விருநிலத்தே. 2

இருவர் மலர்க்குழலார் சித்திபுத்தி யென்பார்
மருவவவர் வாழ்வெனவே வந்தாய்—தருபானே
தேவைப் பழம்பொருணின் சிரடியன் றேசுரர்தம்
பூவைத்த பொன்முடிக்குப் பூண். 3

பூணா ரரவர் மதிமுடி யாரகி லேசர்பொற்பி
ஞானாக வில்லர் நடுவே யுறவன்னை நன்குவப்ப
மாணார் வலத்திற் கைலை விநாயகர் மன்னுகொலுங்
காணா நடுவ ணமர்ந்தனன் சேயக் கமலையொத்தே. 4

மலையெடுத்த வாளரக்கன் மாபலக்கோ மானா
மலையெடுத்த வாறசுற்று மைந்தன்—கலையடுத்த
கோகருணை மாளவைத்த கோமான்றே வைப்பதிக்கு
மாகருணை வாழ்வருள்சீ மான். 5

மான்மக ளாய்வரு மான்மக ளைத்தொடர் மான்மருகன்
ஞான்மய தீரச்செய் தம்பிக்கு வாய்த்த தமயனென்பர்
தேன்முகக் கார்பொழிற் றேவைக்கு முன்வந்ததேவனெனும்
வான்முகக் கிம்புரிக் கொம்புரி மைத்துரை வாரணமே 6

வாரணமுந் தோரணமார் வாயிலில்வே கப்பரியும்
பூரணமா மிந்துமுகப் பூவையருங்—காரணனா

மைங்கானைத் தேவைநக ர்க்காதிபனை யன்பினிற்செய்
பைங்கழலின் பூசைப் பலம் 7

பலமேயொன் ருவவர் பற்றுநர் யார்முகற் பாருலகம்
வலமே வருபவ ரென் னுமை தன்னை வலம்புரிந்து
தலமேழ் வலம்வரு தம்பிக்கு முன்பெற்ற சாதுரியக் [றே.
குலமார் முதறின்ன னூருணிப் பாலொற்றைக் கொம்பனன்

கொம்பனையாள் வல்லபையைக் கொள்ளுமறை நூல்விதியாற்
றும்பிமுகன் வேட்டருளுந் தூமணத்தை—யம்புவியீர்
தேவையினிற் கண்டுதொழுந் திண்ணனுய ரூருணிப்பா
லாவியினல் வாழ்வருளு மாம். 9

ஆமென்று மன்றென்று மாணென்று பெண்ணென்றுமல்ல [தென்றுந்
தோமன்று மாவன்று கோவென்று கொண்டிடுந்தொன்மறைக
டாமன்று தொட்டின்று மாமன் றுதிப்பதுந் தாரகமா
மோமென்று மாமென்ற தேவைப்பி ரானென்ற வும்பலையே.

உம்பனுயர் கொபபனையா ளோங்குமுலைப் பாங்கியர்தந்
தம்பலத்தா லின்பமெனச் சார்மனமே—யமபலத்தார்
தேவை விநாயகனார் சீரடியார் தம்பலத்தாற்
ருவிலின் பமாகுமெனச் சார். 11

சார்ந்தார்க்கு நல்லனல் லார்க்கல்லன் ருனெனுந்தன்மையினைச்
சார்ந்தார் மிதிலைச் சனக னுணர்ந்துயத் தாபதனிற்
சார்ந்தா ரறுகுண்ட சித்தாந்த ஞான சதுரன்கண்டா
சார்ந்தா ரருள்புரி தேவைக் கணேசனைச் சார்மின்களே. 12

மின்னார் பொழில்புடைசூழ் வித்தகநம் பாண்டார்க்கு
மன்னார் தமிழ்மறையின் வைப்பிடத்தைச்—சொன்னார்பேர்
பொல்லா ரவர்தேவைப் பொன்னகரை யாளவந்த
தொல்லா ரவர்கழலே சூழ். 13

சூழ்ந்தும் பலநெறி தேசங்க டோறுந் துருவியுநெஞ்
சாழ்ந்தும் பணமெத் தனைகோடி தேடியு மாவதெவன்
பாழ்ந்துன்ப மிக்கவிவ் வாழ்வினிற் சாரம் பரிந்தவன்பாற்
றாழ்ந்தும் பரவுத றேவைக் கணேசன்மெய்த் தாளிணையே.

இணையார் புகழ்வெண்ணெ யிரட்டைப் பாலர்க்
கிணையார் புகலவவர்க் கெல்லாத்—துணைஞானந்
தந்துசைவ சித்தாந்தந் தாபித்தான் றேவைநகர்ப்
பந்துகணே சப்பெருமான் பார் 15

பாரிற் றிருமலி தேவைக் கொருதெய்வ பாக்கியமா
யேரிற்பொலி தின்னை ஞருணிப் பால்வரு மேரம்பனூர்

காரிற் கதிபடு நீரிற் கிரந்திடக் காவிரியைச்
சீரிற் பெருக்கினர் நாடென்றும் வாழ்ந்து செழித்திடவே.

இடவே பெறுதூய்யா மேற்கில்லை மென்றுங்
கடவேஞ்சை வப்பயிரைக் காக்க—வுடனுவோங்
இன்னா ரூருணிப்பாற் றேவைக் கணேசனுக்கே
பண்ணுவான் றெண்டு பல் 17

பலபல வாமதம் பண்டுசெய் தான்பர மேச்சுரனே
பலபல வாமவை யொன்றைமற் றொன்று பழிப்பனவாம்
பலபல வாமவைக் கொன்றும் பிரணவப் பான்மையனும்
பலபல வாமுருத் தேவை விநாயகப் பண்ணவனே. 18

பண்ணார் மொழியுமைக்கும் பங்கில்வரு சங்கரர்க்குங்
கண்ணாவாய் சேய்க்குகந்த.கண்ணாளா—வண்ணா
வருளா யொருவரநா நின்குடிக ளாவான்
றருவாய்தே வைப்பதிநீ தான் 19

தானே புலகுக்குக் கண்ணுங் கருத்துமெய்த் தத்துவனுந்
தானே மெய்த் தேவைப் பதிக்குநல்,வாழ்வெனச்சால்பதியாந்
தானே யெமக்குத் திருவும் பொருளுந் தகுமுறவாந்
தானே கைலை விநாயகன் றன்னருட் சார்புதந்தே. 20

## வாழ்த்து.

வைய நீடுக மாமழை மன்னுக
மெய் விரும்பிய வன்பர் விளங்குக
சைவ நந்நெறி தாந்தழைத் தோங்குக
தெய்வ வெண்டிரு நீறு சிறக்கவே.

ஸ்ரீ கைலாய விநாயகர்
திரு விரட்டை மணிமாலை
முற்றிற்று.

---




தேவிகோட்டை திண்ணப்ப செட்டியாரூருணி

ஸ்ரீ கைலாச விநாயகர்கோவில்

ஸ்ரீ விசுவநாதர் விசாலாக்ஷி அம்பாள் பேரில்

நவராத்திரியில்

நாவலரவர்களால்

செய்யப்பெற்றன.

---

தேவநகர்த் திண்ணனூ ரூருணி
　　மெய்க்கங்கை யெனத்திருந்து பாங்கர்
மேவியநற் கைலைவிநாயகர் மருங்கின்
　　றூகன்மகவின் விழைந் தவன்பால்
பாவியசீர்ப் புகழ்விசுவ நாதர்
　　விசாலாட்சியிவர் பரிவாற் கொண்ட
கோவியனல் லருட்கொளு வைக்கும்பிடு
　　வாரெங்கலமுங் கொள்வார் தாமே.